15th February 1958]

within the zone. Therefore, we cannot ask for complete restriction on the movement of foodgrains from out of one State.

Sri P. S. SANTHANAM : நிலச்சுவான்தார்கள் தங்கள் நிலங்களிலிருந்து தங்களுக்கு வரும் தானியங்களை அப்போதைக்கப்போது விற்காமல் பதுக்கிவைத்துக்கொண்டிருப்பதால்தான் அவைகளுடைய விலைகள் ஏறுகின்றன. விலைகள் ஏறவேண்டுமென்று அவர்கள் பதுக்கிவைத்துக்கொண்டிருக்கிறார்கள். ஏழை மக்களுக்கு, அவர்கள் வாங்கக்கூடிய விலையில் அரிசி கிடைக்கச் செய்வதற்காக பதுக்கிவைக்கும் விவசாயிகளிடமிருந்து அதை வெளியில் கொண்டுவருவதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : இந்த ராஜ்யத்தைப் பொறுத்தவரையில், இங்கே பதுக்கல் இல்லை என்று நான் ஏற்கெனவே சொன்னேன். அப்படிப் பதுக்கல் ஏற்பட்டால், சர்க்கார் நடவடிக்கை எடுக்கும்.

Sri A. R. SUBBIAH MUDALIAR : தஞ்சை ஜில்லாவில் பயிர்கள் நோய்வாய்ப்பட்டிருப்பதால், உணவு தானிய உற்பத்தியில் 1/7 பங்கு குறைந்திருப்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : தஞ்சையைப்பற்றி கனம் அங்கத்தினர் அவ்வளவு குறைவாக நினைக்கவேண்டாம். எங்கும் நோய் இருக்கிறது. மனிதர்களுக்கு நோய் இருப்பதை எனது சக அமைச்சர் அவர்கள் கவனித்து ஆவன செய்துவருகிறார்கள். இதேமாதிரி பயிர்களுக்கு உள்ள நோயும் கவனிக்கப்பட்டு, அது தீர்க்கப்படுவதற்கான நடவடிக்கை எடுக்கப்படும். ஆகவே பயிர்களுக்குள்ள நோயைக் குறித்து கனம் அங்கத்தினர் பயங்கரமான அபிப்பிராயம் கொள்ள வேண்டாம்.

*Dearness Allowance to N.G.Os.*

* 5 *S.N.Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the Madras Civil Services Joint Council has made any representations to the Government recently to the effect that the dearness allowance of Non-Gazetted Officers may be raised by Rs. 5 with effect from 1st April 1957?

The Hon. Sri C. SUBRAMANIAM : The Council has recommended for the consideration of the Government the immediate sanction of an increase of Rs. 5 in the dearness allowance to the Non-Gazetted Government Officers with effect from 1st April 1957.

Sri N. K. PALANISAMI : இந்தக் கவுன்சிலில் நிதி இலாகாக் காரியதரிசியும் இருப்பதன் காரணமாக இந்த ராஜ்யத்தின் நிதி நிலைமையை அனுசரித்தே சிபாரிசு செய்யப்பட்டிருப்பதால், உடனடியாக இந்த உத்தியோகஸ்தர்களுக்கு அதிக அலவன்ஸ் கொடுப்பதற்காக, அது சம்பந்தமாக சிபாரிசு செய்வதற்காக ஒரு சிறு கமிஷனை நியமிப்பதற்கு அரசாங்கம் முன்வருமா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : இந்தக் கவுன்சிலில் நிதி இலாகாக் காரியதரிசியும் இருப்பதன் காரணமாக இந்த ராஜ்யத்தின் நிதி நிலைமையை அனுசரித்தே சிபாரிசு செய்யப்பட்டிருப்பதாகச் சொல்ல முடியாது. அவசியத்தையொட்டி கவுன்சில் சிபாரிசு செய்திருக்கிறது. இந்த உத்தியோகஸ்தர்களுக்கு அலவன்ஸை நாம் நமக்கு இருக்கும் நிதி வசதிகளை அனுசரித்துக் கொடுக்க வேண்டியிருக்கிறது.